## பட்லர் தயாரித்த 1952-1953 பிரிட்டிஷ் பட்ஜெட்: (லண்டன் நிருபர்)

மேலும் ஒரு பகுதி உணவு மான்யத்தை குறைத்ததால் உணவு விலைகள் ஏறி ஒரு பிரிட்டிஷ் குடும்பத்தின் செலவு 8 சதமானம் உயருகிறது. சுகாதார சேவைகள், மற்ற வசதிகள் குறைக்கப்படுதல் ஆகியவைகளையும் சேர்த்து கணக்கிட்டால் அவர்கள் நிலை எவ்வளவு மோசமாகும். பட்ஜெட் பட்லர் என்றால் வறுமை, யுத்தம், அமெரிக்க அடிமைத்தனம் என்ற வார்த்தைகளைக் கொண்ட துண்டு பிரசுரங்கள் அங்கே விநியோகிக்கப்பட்டன.* இவர் வாரிசு பாக்கோரா: இவர் யாரென்றால்? அடங்காப் பிடாரியாக வளர்ந்தவன். பிரிட்டிஷ் வியாபாரிகளைக் கட்டுக்கடை மோஸ்தராவாக சென்று வந்த பேர்வழி. நகை போணியும் கையுமாக வந்த மோஸ்தரா, அரசாட்சித் துறை வகையறா. 2½ லட்சம் பவுன் இருப்பினும். 27 ஆயிரம் பவுன்கள் வருமானத்தைக் கொடுக்கும் எஸ்டேட்டையும் பெற்றார்! பிரிட்டிஷார் நேரடியாக ஆண்ட பொதுக்கூட ஸர் கெம்மது உஸ்மான் கவர்னராயிருந்தார். அவரும் இந்தியரல்லவா? அவரைப் போல இவரும்.*

**இந்தோனேஷியாவில்:** இந்தோனேஷிய பொருளாதாரத்தின் மீது அமெரிக்க ஆதிக்கம் வளர்ந்து வருகிறது. அமெரிக்க ஏற்றுமதி இறக்குமதி பாங்கி இந்தோனேஷியாவுக்கு 227 லட்சம் டாலர்களை பல வகைகளில் கடனாக அளித்துள்ளது. ஏற்கனவே சென்ற வருட ஜனவரியில் 122 லட்சம் டாலர் கடனாக கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த கடன் தொகைக்கு வட்டி 3½ சதவிகிதம். மத்திய கமிட்டி விடுத்துள்ள அறிக்கையில் அமெரிக்க பரஸ்பர பாதுகாப்பு சட்டத்தின்படியோ, அல்லது வேறு எந்த தேச-விரோத ஒப்பந்தத்தின் படியோ செய்துக் கொண்டுள்ள ஒப்பந்தங்களை யெல்லாம் ரத்து செய்ய வேண்டும். இந்தோனேஷிய மக்களின் போராட்டத்தை ஆதரிக்கும் நாடுகளுடன் உறவு கொள்ளும் சுயேச்சைக் கொள்கையை கையாளும்படி வற்புறுத்துகிறது. மேற்கு இரியன் (நியுகினி) இந்தோனேஷியாவின் ஒரு பகுதியாக வேண்டும் என்றும், அங்கு வைக்கப்பட்டிருக்கும் டச்சு துருப்புகள் ஆக்கிரமிப்பை ஒழிக்கும் நோக்கமுடைய படையெனக் கருத வேண்டும் எனவும் கூறுகிறது.*

**கேரளாவிலே:**

காங்கிரஸை தோற்கடிப்பதிலே முன் உதாரண புருஷர்களாக விளங்கிய தி.கொ. மக்கள், இப்பொழுது எல்லா காங்கிரஸ் எதிர்ப்பு கட்சிகள், ஜனங்கள் இவைகளின் ஒற்றுமைக்காக சக்தி வாய்ந்த ரோல் எடுப்பதென் முன் வர வேண்டும். வீரமிக்க நீடித்த போராட்டங்களுக்குப் பிறகு இந்த ராஜ்யத்தின் திவான் ஆட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்தீர்கள். இப்பொழுது அதே திவான் ஆட்சியை மாற்று உருவில் உங்கள் மீது திணிப்பதற்கான முயற்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. அதை எதிர்த்துப் போராட ஜனநாயக முறையில் உங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை ஒன்றுபட்ட நடவடிக்கை எடுக்குமாறு நீங்கள் வற்புறுத்த வேண்டும்." ஏ.கே.ஜி."

**முதல் அபிப்பிராய பேதம்:** "சுதந்திர கேரளம்" என்ற K.S.P. கோஷத்தின் கேரளம் முழுதும் சேர்ந்த ஒரு ராஜ்ய திட்டத்தை வகுத்துக் கொள்ளவும், மற்ற இந்திய பகுதியுடன் நெருக்கமான உறவை வைத்துக் கொள்ள வேண்டும் என்பதை முடிவு செய்யவும் தனக்கென ஒரு அரசியல் நிர்ணய சபையை ஏற்படுத்த வேண்டும் என்றும் அந்த கோஷம் கோருகிறது. இந்த இந்திய தேசத்தின் ஏகாதிபத்திய-நிலப்பிரபுத்துவ பிற்போக்கை தோற்கடிக்கக்கூடிய தேசம் பூராவதும் உள்ள ஜனநாயக சக்திகளின் ஐக்கியத்தை பலவீனப் படுத்துவதாகும் - தேசம் பூராவதும் உள்ள ஜனநாயக சக்திகளின் ஐக்கியத்தினால் மட்டுமே நிலப்பிரபுத்துவ பிற்போக்கை வெற்றி கொள்ள முடியுமென்று கம்யூனிஸ்டுகள் கருதுகிறார்கள். **இரண்டாவது:** ஐ.மு. இடது சாரிகளை மட்டுமே கொண்டதாக இருக்கவேண்டும் என்று K.S.P. K.S.P. அபிப்பிராயப்படுகிறது. நமது தேசத்தின் காங்கிரஸ் ஆளும் வர்க்கத்திற்கு எதிராகவும், அவர்கள் பிரதிநிதித்துவம் வகிக்கும் அக்கறையுள்ள கூட்டத்திற்கு எதிராகவும், எல்லா ஜனநாயக சக்திகளையும் உட்கொண்டதாக ஐ.மு. இருக்கவேண்டுமென்று, அதாவது நமது தேசத்தின் மீதுள்ள நிலப்பிரபுத்வ - ஏகாதிபத்திய கூட்டுடைமையை தாக்கி எறிய போராட தயாராயுள்ள எல்லா சக்திகளையும் கொண்டதாக இருக்கவேண்டும் என்று கம்யூனிஸ்டுகள் கருதுகிறார்கள். ஒரு உண்மை என்னவென்றால் தலைமை கட்டுப்பட்டிருந்த போதிலும் கீழ் மட்டத்திலே இது தான் ஐக்கியம் என்று சொல்லும்படிக்கு தானாகவே ஒரு பரந்த மக்கள் இயக்கமாக ஐக்கியம் வியாபித்துவிட்டது என்பது தான். **மூன்றாவது:** விவசாய சர்க்காரை ஏற்பது பற்றியது. திவான்களின் ஆட்சியோ, காங்கிரஸ் ஆட்சியோ இரண்டும் மக்கள் அளித்த தீர்ப்புக்கு விரோதமானது என்று கம்யூனிஸ்டுகள் கருதுகின்றனர். இந்த இரண்டு அபாயங்களையும் காலாகாலத்தில் தடுப்பதற்காக பெரிய எதிர்கட்சியான ஐ.மு. காங்கிரஸல்லாத M.L.A.க்களின் ஆதரித்த ஒரு குறைந்த பட்ச திட்ட அடிப்படையில் ஒன்றுபடவும், அத்திட்டத்தின் அடிப்படையில் சர்க்காரை ஏற்று நடத்துவதற்கும் ஒன்றுபட்டு வருவதற்காக முன் முயற்சி செய்ய வேண்டும் என்றும் கம்யூனிஸ்டுகள் அபிப்பிராயப்படுகிறார்கள். **நான்காவது:** விவசாய மாற்று சர்க்காருக்கான குறைந்தபட்ச திட்டத்தை ஏற்பது பற்றியது. காங்கிரஸல்லாத M.L.A.க்கள் காங்கிரஸ் எதிர்ப்பு மேடையிலிருந்தே தங்களின் வெற்றியை சம்பாதித்திருப்பதால் குறைந்தது சில அம்சங்களிலேனும் மக்களின் நலன்களுக்கும், விருப்பங்களுக்கும் பிரதிநிதித்துவம் வகிக்க கட்டுப்பட்டுள்ளார்கள். ஆகவே, ஒரு குறைந்தபட்ச திட்டத்தின் மீது அவர்களின் ஒற்றுமையை கட்டுவதற்கான அடிப்படை இருப்பதாக கம்யூனிஸ்டுகள் கருதுகிறார்கள். பரவலான காங்கிரஸல்லாத M.L.A.க்கள் பகுதியை ஏற்கும்படியாகச் செய்ய, மக்களின் உடனடி தேவைகளுக்கும் அவசியத்திற்கும் ஏற்ப சில அம்சங்கள்,